Regd: No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55



**திறமை**

பாசமும் நேசமும்ஏற் பட்டால் திறமைகள் முற்றிலும் நிரம்பியிருக் கிறதா என்று கூடக் கவனிக்கச்சொல்லாது. இருப் பதைக் கண்டு மகிழ வைத்து விடும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**உரிமை**

என் அபிப்ரா யத்தை மறுக்க உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால்என் அபிப்ராயத்தை வெளியிட எனக்கு உரிமை உண்டு.

- தந்தை பெரியார்



மலர்: 9 சென்னை 24-2-1985 ஞாயிறு ★ ★ ★ வெளியூர் 25-2-1985 திங்கள் இதழ் 128

## ★ இலங்கையிலிருந்து நிராதரவாகவரும் தமிழர்களுக்கு புரட்சித்தலைவர் அரசு தாராளஉதவி

## ★ அகதிகளுக்கு நோய்வராமல் தடுக்க டாக்டர்கள் குழு சென்னையிலிருந்து விரைந்தது

# புரட்சித்தலைவர் அவசர ஏற்பாடு

## டாக்டர் அண்டே மண்டபம் விரைந்தார்

ராமேஸ்வரம், பிப். 24- இலங்கையிலிருந்து நிராதரவாக வந்துள்ள தமிழர்களுக்கு போதிய உதவிகளைச் செய்ய முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார். அவர்களுக்கு மருத்துவ வசதிகிடைக்கவும் புரட்சித் தலைவர் மருத்துவர்களை அனுப்பிவைத்துள்ளார். புரட்சித்தலைவர் சார்பில் அமைச்சர் அண்டே மண்டபம் சென்றுள்ளார்.



சட்டப்பேரவை தற்காலிக சபாநாயகராக ப.உ.ச. ஆளுநர் குரானா முன்னிலையில் பதவி ஏற்றார்.



இலங்கை ராணுவத்தினரின் கொடுமைகள் தாளாது, இலங்கையிலிருந்து தமிழகம் வரும் இலங்கைத் தமிழர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறது.

இலங்கையிலிருந்து அகதிகளாக வரும் தமிழர்களுக்குதேவையானஉணவு இருப்பிடவசதி போன்றவற்றை மத்திய - மாநில அரசுகள் செய்து வருகின்றன.

ராமேசுவரம், மண்டபம் ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ள முகாம்களுக்கு மத்திய சமூக நல அமைச்சா மரகதம் சந்திரசேகரும், தமிழக சமூகநலத்துறை அமைச்சர் கோமதி சீனிவாசனும் சென்றுபார்வையிட்டு, முகாம்களில் தங்கி இருக்கும் பெண்களுக்கு ஆறுதல் கூறினர். அந்த முகாகளில் நடைபெற்று வரும் நிவாரணப் பணிகளைப் பற்றியும் விசாரித்தனர்.

### முதல்வர் உத்தரவு

இலங்கையில் இருந்து அகதிகளாக தமிழகம் வரும், தமிழர்களுக்கு தேவையனை அனைத்து உதவிகளையும், செய்து தர முதல்வர் புரட்சித் தலைவர் அதிக அக்கறை கொண்டு, இது தொடர்பாக அதிகாரிகளுக்கு உத்தரவிட்டிருக்கிறார்.

ராமேசுவரம், மண்டபம் முகாம்களில்தங்கவைக்கப் பட்டுள்ள, அகதிகளுக்கு தேவையான மருத்துவ உதவிகளைச் செய்வதற்காக, முதல்வர் புரட்சித்தலைவரின் உத்தரவின் பேரில் சுகாதார இயக்குநர் டாக்டர் கபாலி, மருத்துவப் பணி இயக்குநர் டாக்டர் வேணுகோபால் ஆகியோர் தலைமையில் மருத்துவர்கள்குழுராமேசுவரம் சென்றுள்ளது.

### டாக்டர் அண்டே

முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் அமைச்சர் அண்டே சென்றுள்ளார். இந்த முகாம்களில் நடைபெற்று வரும் மருத்துவ மற்றும் சுகாதாரப் பணிகளை மேற்பார்வையிட்டவும், மருத்துவர்களுக்கு தேவையான உதவிகளைச் செய்யவும், தன்னைமுதல்வர் புரட்சித் தலைவர் அனுப்பி யுள்ளதாக அமைச்சர் அண்டே நிருபர்களிடம் பேசுகையில் கூறினார்.

அமைச்சர் அண்டே மேலும் கூறியதாவது:-

ராமேசுவரம், மண்டபம் முகாம்களில், தங்கியுள்ள ஒவ்வொருவரின் உடல் நிலையும் பரிசோதிக்கப் பட்டுவருகிறது.

### ரத்தப் பரிசோதனை

ராமேசுவாம் முகாமில் உள்ள 6,500 பேருக்கும் மண்டபம் முகாமிலுள்ள 3,500 பேருக்கும் இதுவரை ரத்தப்பரிசோதனை நடைபெற்றுள்ளது.

காலரா போன்ற தொற்று நோய்கள் ஏதாவது உள்ளனவா என்பதற்கு இந்தச்சோதனை நடத்தப்பட்டது. மருத்துவச் சோதனையில் அதுபோன்று எதுவும் இல்லை.

முகாம்களில் தங்கி உள்ள ஒரு சிலருக்குவயிற்றுப்போக்கு ஏற்பட்டதாக தகவல் வந்தது இதைத்தொடர்ந்து அவர்கள் உடல் நிலை பரிசோதிக்கப்பட்டு, அது சாதாரண அஜீரணம் என்பதுகண்டறியப்பட்டு, அதற்குண்டான மருந்துகள் வழங்கப்பட்டன. தற்போது அவர்கள் குணமடைந்து வருகிறார்கள்.

### வேன்கள் தயார்

மேலும், முகாம்களில் தங்கியுள்ளவர்கள் யாரேனும் சுகவீனமுற்றால் அவர்களை உடனடியாக ராமநாதபுரம் தலைமை மருத்துவ மனைக்குக் கொண்டு செல்ல தேவையான வாகன வசதிகள் எப்போதும் தயார் நிலையிலேயே உள்ளன.

ராமேசுவரம் மண்டபம்முகாம்களில்தங்கியுள்ள எவருக்கும் காலரா அறிகுறி இல்லை. ஒருசிலருக்கு டயேரியா(வயிற்றுப் போக்கு) ஏற்பட்டது.

### சுகாதார வசதி

ஒரு சுகாதார அதிகாரியும், தண்ணீரைப் பரிசோதிக்கும் நிபுணரும் சென்னையிலிருந்து ராமேசுவரம் சென்றுள்ளனர். வயிற்றுப் போக்கை கட்டுப்படுத்தும் தேவையான மருந்துகளையும், எடுத்துச் சென்றுள்ளனர்.

ராமேசுவரம், மண்டபம் முகாம்களில் தங்கியுள்ள இலங்கைத் தமிழர்களுக்கு தேவையான அனைத்துமருத்துவ வசதிகளும் உடனுக்குடன் செய்து தரமருத்துவர்கள் எப்போதும் தயார் நிலையில் வைக்கப்பட்டுள்ளனர். முகாம்களை சுற்றி சுகாதாரப்பணிகள் மேம்படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினார்.

இலங்கையிலிருந்து தமிழகம் வரும் அகதிகள் எண்ணிக்கை நாளும் அதிகரித்து வருகிறது.

### அண்டே ஆறுதல்

திருச்சியிலிருந்து ராமேசுவரம் சென்ற அமைச்சர் அண்டேஅங்கு தங்கியிருக்கும் இலங்கைத் தமிழர்களை

2-ம் பக்கம் பார்க்க

# பிரிவினை விஷம் கக்கும் கருணாநிதியே கேள்...!

கழகம் பற்றி ஆபாச அர்ச்சனை, புரட்சித் தலைவர் உடல் நிலை பற்றி கேலியும், கிண்டலும் கலந்த பேச்சு - இப்படியெல்லாம் பேசி மக்களால் தேர்தலில் தூக்கியெறியப்பட்டு, சாக்கடையில் விழ்ந்து கிடப்பவர் கருணாநிதி!

தேர்தலில் கிடைத்த அடி அவரை இத்தனை நாள் கூட்டங்களுக்கு வராமல்செய்திருந்தது. கருணாநிதியின் மவுனத்தைப் பார்த்த சிலபேர், அவர் திருந்தி, கண்ணிய நிலைக்கு உயர்ந்து வருவதாகக் கூடச் சொன்னார்கள்.

இப்போது மயிலாப்பூர் கூட்டத்தில் பேசி இருக்கிறார்.

"இந்தியாவுடன் இணைந்திருக்கின்றதால்தான், ஈழத்தமிழர்களைக் காப்பாற்ற முடியவில்லை என்று எதிர்காலத் தமிழர்கள் எண்ணினால் ஈழத்தமிழரைக் காக்கத் தவறியவர்களே அதற்குப் பொறுப்பு" என்று கருணாநிதி பேசினாராம்!

இதற்குப் பொருள்என்ன? வெண்டைக்காய் -- விளக்கெண்ணை வகைப் பேச்சுத்தான் இது என்று ஒதுக்கிவிட முடியாது! ஆலகால விஷத்தை மறைத்துக் கொடுக்கிறார் ஆரூரார்.

இலங்கைத் தமிழர்களைக் காக்க முடியாததற்குக் காரணம் தமிழகம் இந்தியாவுடன் இணைந்துஇருப்பதுதான்! தமிழகம் தனி நாடாக இருந்தால் இலங்கைத் தமிழர்களைக் காப்பாற்றி இருக்கலாம் என்று எதிர்காலத் தமிழர்கள் எண்ணுவார்களாம்! இப்படிப் பிரிவினை எண்ணம் பரப்பப்பட்டால், அதற்குக் காரணம் கருணாநிதியைப்போன்றவர்கள்இல்லையாம்! மத்திய அரசு தான் காரணமாம்.

-இதுதான் கருணாநிதி பேசியதன் பொருள்!

**அ. பொ. நாராயணன்**

ஜெகஜால வித்தையை, எல்லாம் காட்டி தேர்தல் பிரச்சாரம் செய்து பார்த்துப் படுதோல்வி அடைந்தார் கருணாநிதி!

இனி என்ன பிரச்சினையைக் கிளப்பலாம் என்று யோசித்துப் பிரிவினை என்கிற கொடிய ஆயுதத்தைத் தூக்கி இருக்கிறார்!

கருணாநிதி முதல்வராக இருந்த போதும் இலங்கையிலே தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டனர்.

### அந்த நேரத்தில் இங்கே குட்டிமணியைக் கைது

(2-ம் பக்கம் பார்க்க)

# எட்டாவது சட்டமன்ற உறுப்பினர்கள் நாளை (திங்களன்று) பதவி ஏற்பு

சென்னை, பிப். 24- சமீபத்தில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் தமிழகத்தில் கழகம் மாபெரும் வெற்றியை பெற்றது.

மூன்றாவது முறையாக கழகம் ஆட்சிபொறுப்பை ஏற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் மூன்றாவது முறையாக தமிழகத்தின் முதலமைச்சராக பொறுப்பு ஏற்றார்.

புதியஅமைச்சரவையில் புரட்சித் தலைவர் தலைமையில் 17 பேர் அமைச்சாகளாக பதவி ஏற்றனர்.

தமிழகத்தின் 8 வது சட்டமன்றம் நாளை (25-ந்தேதி) காலை 10 மணிக்கு கூடுகிறது.

எட்டாவது சட்டமன்றத்தின் தற்காலிக சபாநாயகராக ப. உ. ச,வை ஆளுநர் குரானா நியமித்திருக்கிறார்.

நாளைய கூட்டத்திற்கு தற்காலிக சபாநாயகர் ப.உ.ச. தலைமை தாங்கி புதிய உறுப்பினர்களுக்கு பதவி பிரமாணம் செய்து வைக்கிறார்.

அவை கூடியவுடன் உறுப்பினர்கள் அகர வரிசைப்படி பதவி ஏற்பார்கள்.

சட்டசபையில் 234 பேர் உறுப்பினர்கள்அதில் வட ஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் வெற்றி பெற்ற சண்முகம் (இந்திராகாங்கிரஸ்) மரணமடைந்ததால் 233 பேர் நாளை பதவிஏற்கிறார்கள்.

இவர்களில் 101 பேர் பழைய சட்டசபையில் உறுப்பினர்களாக இருந்தவர்கள். மற்ற 132 பேர்களும் புதியவர்கள்.

புதிய சபாநாயகர் தேர்தல் 27ந்-தேதி நடைபெறுகிறது.

அதில் போட்டியிட விரும்புவோர் செவ்வாய் கிழமை (26-ந்தேதி) பகல் 12மணிக்குள் மனுதாக்கல் செய்ய வேண்டும்.

போட்டியிருந்தால் புதன் கிழமையன்று (27,ந்தேதி) எம். எல்-ஏக்கள் ஓட்டுப்போட்டு சபாநாயகரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

சபாநாயகர் தேர்தலுக்குப்பின் சட்டசபைக் கூட்டம் தள்ளிவைக்கப்படும்.

மீண்டும் மார்ச்8ந்தேதி சட்டசபையின் பட்ஜெட் கூட்டத்தொடர் துவங்கும். அன்றைய தினம் சட்டப் பேரவை மேலவை கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா உரையாற்றுவார்.

சட்டசபையில் கட்சிகளின் உறுப்பினர் விவரம் வருமாறு:-

| | |
|---|---|
| கழகம் — | 133 |
| இந்திரா காங்கிரஸ் — | 61 |
| தி.மு.க. — | 22 |
| மார்க்சிஸ்டு — | 5 |
| ஜனதா — | 3 |
| இந்தியகம்யூனிஸ்டு | 2 |
| கா.கா.தே.கா — | 2 |
| முஸ்லீக் | -2 |
| பார்வர்டு பிளாக் | -1 |
| தமிழ் நாடு பார்வர்டு பிளாக் | -1 |
| சுயேச்சை | -1 |
| | —234 |

## கிறித்துவ முன்னேற்றக் கழகத்தினர் முதல்வரை சந்தித்தனர்

சென்னை, பிப். 24- கிறிஸ்துவ முன்னேற்றக் கழகத் தலைவர் ஜோசப் பெர்னாண்டோ, பொதுச் செயலாளர் பேராசிரியர் ஜேசுராஜா, பொருளாளர் ஏ.எம்.வி. அடைக்கலம் ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்துப் பேசினர்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலைஅணிவித்து வாழ்த்தினர்.

கப்பல் தீ விபத்து:

## இறந்தவர் குடும்பத்துக்கு பிரதமர் நிதியுதவி

சென்னை, பிப். 24- சிங்கப்பூரில் இருந்து சென்னைக்கு வந்துகொண்டிருந்த எம்.வி. சிதம்பரம் கப்பலில் தீவிபத்து ஏற்பட்டதும் அதில் 34பேர், உயிரிழந்ததும் தெரிந்ததே.

இறந்தவர்களில் 21 பேர் இந்தியர்கள் இவர்களின் குடும்பத்துக்கு பிரதமர் ராஜீவ்காந்தி 52 ஆயிரத்து 500 ரூபாய் நிதிஉதவி வழங்கியுள்ளார். பிரதமரின் தேசிய நிவாரண நிதியிலிருந்து இந்த உதவி அளிக்கப்பட்டுள்ளது.

## தினகரன் பொய்செய்திக்கு மறுப்பு

தஞ்சை, பிப். 24- திருவாரூரை அடுத்த மாவூரில் உள்ள ஜெயராமன் என்பவர் தி.மு.கவில் சேர்ந்துள்ளதாக தினகரன் ஏடு வெளியிட்டுள்ள பொய்ச்செய்தியை மாவட்ட எம். ஜி. ஆர் மன்றதுணைச்செயலாளர் மூ. அப்துல்லா மறுத்துள்ளார்.

ஜெயராமன் என்றவரும் எம். ஜி. ஆர். மன்றத்தில் எப்போதும் எந்த பொறுப்பிலும் இல்லை. கழகத்தில் கூட அப்படி யாருமில்லை. தினகரன் பொய்யான தகவலை வெளியிட்டது கண்டிக்கத்தக்கது என்றும் அப்துல்லா தெரிவித்துள்ளார்.

## புரட்சித்தலைவர் அவசரஏற்பாடு...

(1-ம் பக்க தொடர்ச்சி)

சந்தித்து ஆறுதல் கூறி அவர்கள் குறைகளைக் கேட்டறிந்தார்.

அப்போது ஒருவர் "என் கண் முன்னாலேயே என் மனைவியை சிங்களராணுவத்தினர் கற்பழித்தார்கள்". என்று கூறினார். இதைக் கேட்டு அமைச்சர் அண்டேகண் கலங்கினார்.

பின்னர் முகாம்களில் உள்ள மற்றவர்களைச்சந்தித்து அவர்களுக்கு செய்து தரப்படும் உதவிகள் பற்றிக் கேட்டறிந்தார்.

அவர்கள் தங்களுக்கு செய்யப்படும் உதவிகள் குறித்து முழு திருப்தி தெரிவித்தனர்.

அமைச்சர் அண்டேவுடன், கழக எம்.எல்.ஏ. ராமசாமியும் சென்றிருந்தார்.

தமிழகம் வரும் இலங்கைத் தமிழர்களுக்கு தேவையான அனைத்து உதவிகளும், செய்யப்படுவதாகவும், இதுவரை 12 ஆயிரத்துக்கு மேற்பட்டோர் அகதிகளாக தமிழகம் வந்துள்ளதாகவும், ராமநாதபுரம் ஆட்சித்தலைவர் குருமூர்த்தி நிருபர்களிடம் தெரிவித்தார்.

மாணவ -மாணவிகட்கு

## சித்தமருத்துவம் பற்றிய பேச்சு- கட்டுரை போட்டி

சென்னை, பிப். 24- தமிழகத்தில் மிகவும் தொன்மையும் வன்மையும் வாய்ந்த சித்தமருத்துவம்பற்றி பள்ளிமாணவ மாணவிகளுக்கு பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி நடைபெறுகிறது.

இப்போட்டி மார்ச் மாதம் 11, 12 ந் தேதிகளில் தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியத்தில் நடைபெறுகிறது. போட்டிகளில் வெற்றி பெறும் முதல் மூன்று பேர்களுக்கு பரிசுகள் வழங்கப்படுகிறது.

எல்லா கல்லூரி மேல் நிலைப்பள்ளிகளிலிருந்தும் தலா 2 பேர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு வாரிய செயலாளர் குத்சியா காந்தி கேட்டுக் கொண்டுள்ளார்.

''வள்ளுவர் கண்ட மருத்துவம்,'' ''திருமூலர் திருமந்திரம்'' ''மூலிகை மருத்துவம்'' ஆகிய தலைப்புகளில் பேச்சுப் போட்டியும் ''தமிழ் நாட்டில் மூலிகைச் செல்வங்கள்'' 'தமிழ்மருத்துவம்தழைக்க தரமான கருத்துக்கள்' ''உணவேமருந்து-மருந்தே உணவு'' என்ற தலைப்பில் கட்டுரைப் போட்டியும் நடைபெறுகிறது.

## கருணாநிதிக்கு எச்சரிக்கை...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

செய்து, இலங்கையிடம் ஒப்படைத்தவர் கருணாநிதி.

கண்கள் தோண்டப்பட்டு, குட்டிமணி இலங்கையில் படுகொலை செய்யப்பட்டார். இந்தக் கொடுமைக்கு மூலகாரணம் கருணாநிதி!

தமிழர்கள் படுகொலை செய்யப்படுகிற நோத்தில் சென்னைக்கு வந்த இலங்கையின் பிரதமர் சிரிமாவோவுக்கு மாலை போட்டு வரவேற்ற "பண்பாளரும்" (?) கருணாநிதியே! சிரிமாவோ பயமின்றி, கருணாநிதியின் பண்பறிந்து சென்னை வந்தார்.

ஆனால் இன்றைக்குத் தமிழக அரசின் சீற்றம் கண்டு, ஜெயவர்த்தனா ஆகட்டும், அல்லது அதுலத்முதலி ஆகட்டும், அல்லது வேறு எந்த இலங்கை அரசு பிரதிநிதியாகட்டும், சென்னைப் பக்கமே வராமல் பம்பாய் வழியாக டெல்லிக்கு ஓடுகிற நிலைமையைப் புரட்சித்தலைவர் ஏற்படுத்தியுள்ளார்.

அப்படிப்பட்ட ஆட்சி இங்கே நடக்கிறது.

தமிழர்கள் கொல்லப்பட்டால் இலங்கையைக்காப்பாற்ற முடியாது என்று அதுலத் முதலியிடமே நேரில் எச்சரித்திருக்கிறார் பிரதமர் ராஜீவ் காந்தி.

ஆனால் இதையெல்லாம் மறைத்துவிட்டு, தமிழர்கள் படுகொலைக்குக் காரணமான சிரிமாவோவுக்குமாலையணிவித்துவரவேற்றதையும், குட்டிமணியைக் காட்டிக் கொடுத்ததையும் மறந்துவிட்டு, மயான காண்டத்து வசனம் பேசி இருக்கிறார் கருணாநிதி!

எந்த ரூபத்திலும் பிரிவினையை அனுமதிக்கமுடியாது என்று சபதம் பூண்டிருக்கிற மத்திய அரசு விரக்தி அரசியல்வாதி கருணாநிதியின் விஷச்சாகுபடி முயற்சியைக் முறியடிககும் என்பதில் சந்தேகமில்லை!

சென்னை நகரில் உள்ள

## சத்துணவு கூடங்களில் போலியோ தடுப்பு இலவச மருந்து

சென்னை, பிப். 24- சென்னைநகரில் உள்ள சத்துணவுக்கூடங்களிலும், குழந்தைகள் நலமையங்களிலும், மாநகராட்சி மருந்தகங்களிலும், குழந்தைகளுக்கு இலவசமாகபோலியோதடுப்புமருந்து அளிக்கப்படுகிறது.

சென்னை நகரில் உள்ள குழந்தைகளுக்கு போலியோ (இளம்பிள்ளைவாதம்) நோய் தடுப்பு மருந்தை அரசு இலவசமாக அளித்து வருகிறது.

இளம்பிள்ளை வாத நோயைத் தடுக்க ஏற்கனவே, ஜனவரி பிப்ரவரி மாதங்களில் சொட்டு மருந்துகள் இலவசமாக அளிக்கப்பட்டன.

மூன்றாவது கட்டமாக மார்ச் மாதம் 4-ந்தேதி முதல் 7ந்தேதி வரை சொட்டு மருந்து வழங்கப்படுகின்றன.

ஏற்கனவே, இருமுறை சொட்டு மருந்து பெற்றுக் கொண்ட குழந்தைகளுக்கு மூன்றாவது முறையாக இப்போது இந்த மருந்து அளிக்கபபடுகிறது. இதனை அவசியமாக அவர்கள் பெற்றுக் கொள்ள வேண்டும்

சென்னை நகரில் உள்ள முதலமைச்சர் குழந்தைகள்சத்துணவுக்கூடங்கள், சமூகநலத் துறையின் குழந்தைகள் காப்பகமையங்கள், மாநகராட்சி மருத்துவமனைகள் ஆகியவற்றில் மார்ச் 4ந் தேதி முதல் 7ந் தேதிவரை இந்த இலவச சொட்டு மருந்து அளிக்கப்படுகிறது.

மூன்றுமாதம் முதல், மூன்று வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு இந்த மருந்துஅளிக்கப்படுகிறது.

இதுவரை போலியோ தடுப்பு மருந்து போட்டுக் கொள்ளாத குழந்தைகளைக்கூட அழைத்து வந்து, முதல் தடவையாக இந்தமருந்து போட்டுக் கொள்ளலாம்.

இதுபற்றி மேற்கொண்டு தகவல் பெற விரும்புபவர்கள், சென்னை எழும்பூரில் உள்ள குழந்தைகள் நலமையத்தில் 848135 என்ற தொலைபேசியில் தொடர்பு கொண்டு அறிந்து கொள்ளலாம்.

## குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தைஊக்குவிக்க ரூ. 15 லட்சம் பரிசு

### அரசின் புதிய திட்டம் அறிவிப்பு

சென்னை' பிப். 24 - குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை ஊக்குவிக்க புதிய பரிசு திட்டம் ஒன்றை தமிழகஅரசு அறிவித்துள்ளதுபல்வேறு தரப்பினருக்கு ரூ 15 லட்சம்பரிசுவழங்கப்படும்.

புதிய பரிசு திட்டம் பற்றி தலைமை செயலாளர் சொக்கலிங்கம் கூறியதாவது:-

குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை ஊக்குவிக்க, பலநடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

இப்போது புதிய திட்டம்ஒன்றை செயல்படுத்த அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

குறியீட்டளவைத்தாண்டி பணியாற்றிய அதிகாரிகள், நிறுவனங்கள் தனி நபர்கட்கு ரொக்கப் பணம் வழங்கப்படும். இத்திட்டத்தின்படி மொத்தமாக ரூ. 15 லட்சம் பரிசு வழங்கப்படும்.

1983-84ம் ஆண்டில் சிறப்பாக பணியாற்றியவர்கட்கு நடப்பாண்டில் இப்பரிசு வழங்கப்படும். தீவிரமாக பணியாற்றிய மாவட்ட ஆட்சித் தலைவருக்கு ரூ. 6,500 பரிசுவழங்கப்படும்.

தாசில்தார், அதிகாரிகள், பஞ்சாயத்து ஊழியர்களுக்கு இப்பரிசு வழங்கப்படும்.

இவ்வாறு சொக்கலிங்கம் கூறினார்.

வரதட்சணைக்காக

## பல பெண்களை மணந்தவர் கைது

சென்னை, பிப். 24— வரதட்சணைக்காக திருமணம் செய்த பெண்ணை அடித்து துரத்திவிட்டு, மற்றொரு பெண்ணை மணந்தாராம் ஒருவர். அந்தப்பெண்ணையும் அடித்து துரத்திவிட்டு வேறு இரு பெண்களை திருமணம் செய்ய முயன்றாராம் அவரை கிழக்கு செங்கை மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு ரமணன் உத்தரவின் பேரில் இன்ஸ்பெக்டர் செல்வராஜ், தலைமை போலீஸ்காரர் விஸ்வநாதன் ஆகியோர் கைது செய்தனர்.

அவர்பெயர் ராகவன். சிட்லபாக்கத்தைச் சேர்ந்தவர். அவருக்கு உடந்தையாக இருந்ததாக அவரது தகப்பனார் சகோதரர்கள், சகோதரி ஆகியோர் மீதும் வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது

## தமிழர் வீடுகளுக்கு 'சீல்' வைத்த சிங்கள ராணுவம்

ராமேஸ்வரம், பிப். 24- சிங்கள ராணுவத்தினரால் பயங்கரமான தாக்குதலுக்கும், மிரட்டலுக்கும் ஆளான தமிழர்கள் இலங்கையில் இருந்து தமிழகத்துக்குஅகதிகளாக வந்தவண்ணம் உள்ளனர்.

ராமேசுவரத்துக்கு தப்பி வந்துள்ள, தமிழர்கள் தங்களுக்கு இலங்கை ராணுவத்தினர் இழைத்த கொடுமைகளைச் சொல்லி கண்ணீர் விட்டனர்.

தமிழர்களை மிரட்டி துரத்தி விட்டு அவர்களுடைய வீடுகளுக்கு சிங்கள ராணுவம் சீல்வைக்கிறது. தமிழர்களின் வீடுகளில் ஆயுதம் ஏந்தியசிங்களவர்களை குடியமர்த்தும் பணியிலும் ராணுத்தினர் ஈடுபட்டனர்.








தமிழகத்திலுள்ள

## ஏழை குழந்தைகள் 62 ஆயிரம்பேருக்கு இலவச காதொலிகருவி

சென்னை, பிப். 24- தமிழகத்திலுள்ள 62 ஆயிரம் ஏழை குழந்தைகளுக்கு, காதொலிக் கருவி வழங்கப்படுகிறது. முதற்கட்டமாக இந்த ஆண்டு 15 ஆயிரம்குழந்தைகளுக்கு காதொலி கருவி வழங்க தேர்வுகள் நடைபெறுகின்றன.

தமிழக அரசு சமூக நலத்துறையின் மூலம் காது கேளாத குழந்தைகளுக்கு இலவச காதொலி கருவி வழங்கிவருகிறது.

இந்த ஆண்டு 15 ஆயிரம் காதொலி கருவிகள் வழங்கப்படவுள்ளன.

4 ஆண்டுகளில் 62 ஆயிரம் காதொலி கருவிகள் வழங்க 2 கோடியே 48 லட்ச ரூபாய் செலவில் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

இலவச காதொலி கருவி பெற விரும்பும் குழந்தையின் பெற்றோர் அல்லது பாதுகாவலருக்கு மாதம் ஆயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் இருக்கக் கூடாது.

18 வயதுக்கு உட்பட்ட எல்லா குழந்தைகளுக்கும் இக் கருவி வழங்கப்படுகிறது.

ஏழ்மை நிலையில்உள்ளவர்களுக்கும், பள்ளி செல்லும் குழந்தைகளுக்கும், இத்திட்டத்தில் முன்னுரிமை வழங்கப்படுகிறது.

இதனை பெறவிரும்பும் மனுதாரர், கடந்த 5 வருடங்களில் எந்த திட்டத்தின்மூலமும் காதொலி கருவியை பெற்றிருக்கக் கூடாது.

இக்கருவி பெறத்தகுதி உடையவர்களைத் தேர்ந்தெடுக்க தமிழ் நாடு முழுவதும் முகாம்கள் நடைபெறுகின்றன.

கடந்த 6ந்தேதி முதல், 22ந் தேதி வரை செங்கற்பட்டு, மதுரை, திருநெல்வேலி, கோவை, தஞ்சை தென்னாற்காடு, திருச்சி, ராமநாதபுரம், கன்னியாகுமரி, பெரியார் மாவட்டங்களில் இரண்டு கட்ட முகாம்நடைபெற்றது.

இந்த முகாம்களில் 30 ஆயிரம் பேர். பரிசோதிககப்பட்டனர். இதில் 10 ஆயிரம் பேர்கள் கருவி பெற தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

23-ந் தேதி முதல் மார் 1.ந் தேதிவரை சென்னை புதுக்கோட்டை வடாற்காடு, சேலம் நீலகிரி, தர்மபுரி, ஆகிய இடங்களில் மூன்றாம் கட்ட முகாம் நடைபெறுகிறது.

இந்த முகாமில் 5 ஆயிரம் பேர் தேர்வு செய்யப்படுவார்கள். இந்த 15 ஆயிரம் பேர்களுக்கும் இரண்டு அல்லது மூன்று மாதங்களில் காதொலிக் கருவிகள் வழங்கப்படும்.

வரி ஏய்ப்பு:
பம்பாய் நகரில்

## 200 இடங்களில் ஆயிரம் அதிகாரிகள் சோதனை

பம்பாய், பிப். 24- வரி ஏய்ப்பு தடுப்பு நடவடிக்கையாகபம்பாய் நகரில் வியாபார நிறுவனங்கள் மற்றும் வீடுகள் போன்ற 200 இடங்களில் வருமான வரித் துறை அதிகாரிகள் ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் சோதனை நடத்தினர்.

## பிற மாவட்டங்களில் இலங்கை அகதிகளை குடி அமர்த்த ஏற்பாடு

மதுரை, பிப். 24- தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களில் குடியமர்த்துவதற்காக இலங்கையிலிருந்து வரும் அகதிகள் அனுப்பப்படுகிறார்கள்.

இலங்கையில் இருந்து இராமேஸ்வரத்திற்கு அகதிகள் தொடர்ந்து வந்துகொண்டு உள்ளனர். நேற்று முன்தினம் வரை 1,051 குடும்பங்களைச் சேர்ந்த 4,277 பேர் வந்து சேர்ந்துள்ளனர். ஒரே நாளில் 39 குடும்பங்களைச் சேர்ந்த 184 பேர் 6 படகுகளில் இராமேஸ்வரம் வந்து உள்ளனர்.

இவர்கள் அனைவரும் இலங்கையில் உள்ள பேசாலை, தலைமன்னார், குயிலன்குளம், ஜாப்னா, மன்னார் பகுதியைச் சார்ந்தவர்கள். மண்டபம் முகாமிற்கு வரும் அகதிகளுக்கு தேவையான அனைத்து வசதிகளும் செய்யப்பட்டுள்ளன. வந்திருக்கும் அகதிகளில், சிலரை பிற மாவட்டங்களுக்கு அனுப்பி வைக்கும் பணியும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

அவர்கள் பிறமாவட்டங்களில் குடி அமர்த்தப் படுகிறார்கள்.

## ராஜஸ்தான் முதல்வராக ஹீராலால்

ஜெய்ப்பூர், பிப். 24- ராஜஸ்தான்மாநிலமுதல்வர் சிவசரண் மாத்தூரின் ராஜினாமாவை கவர்னர் ஏற்றுக்கொண்டார். புதிய முதல்வராக ஹீராலால் தேவ்புராவை கவர்னர் நியாமித்தார். அவர் நேற்று இரவி புதியமுதல்வராக பதவி பொறுப்பேற்றார். ராஜாமான்சிங் என்றசுயேச்சை வேட்பாளர் போலீசாருடன் நடந்த துப்பாக்கி சண்டையில் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து முதல்வர் சிவசரண் மாத்தூர் தனது பதவியை ராஜினாமா செய்தார்.



Edited and Published by . RAVINDRAN on behalf of Thangamani Public ons and Printed by All India Ann D. M. K. Perarignar Anna- Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600029

### ஃ சென்னை நகரில் 13 மாடி கட்டிடம்
### ஃ பஞ்சாயத்துகளில் புதிதாக வீடுகள்
## வெள்ளிவிழா ஆண்டையொட்டி

# ரூ.52 கோடி செலவில் 25 ஆயிரம் வீடுகள்

### முதல்வர் புரட்சித்தலைவர் அரசின் திட்டங்கள்: வாரியத் தலைவர் ஏ. செல்லையா தகவல்

**சென்னை, பிப். 24- தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம் பஞ்சாயத்துக்களில் முதன்முறையாக வீடுகள் கட்ட இருக்கின்றது. இந்த ஆண்டில் சுமார் 52 கோடியே 50 லட்சம் ரூபாய் செலவில் வீடுகள் கட்டப்படுகின்றன. சென்னையில் ஒரு 13 மாடி கட்டிடம் கட்டப்படும் என்றும் வாரியத்தலைவர் ஏ. செல்லையா தெரிவித்தார்.**

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத் தலைவர் ஏ.செல்லையா நிருபரிடம் கூறியதாவது:-

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் இந்த ஆண்டினை (85) வெள்ளி விழா ஆண்டாகக் கொண்டாடுகிறது.

வெள்ளிவிழா ஆண்டையொட்டி, பல்வேறுசிறப்பு திட்டங்களை செயல்படுத்த இருக்கிறோம்,

இதுவரை தமிழகத்தின் மாவட்ட தலைநகரங்களிலும் நகர்ப்புறங்களிலும் மட்டும் வீட்டு வசதி வாரியம் வீடுகளைக் கட்டி வந்தது.

வெள்ளிவிழா ஆண்டையொட்டி, பஞ்சாயத்துக்களில் வீடுகளைக் கட்ட இருக்கிறோம், பஞ்சாயத்துகளில் எவ்வளவு வீடுகள் வேண்டுமானாலும் கட்டித்தர இருக்கிறோம்.

இந்த ஆண்டு மட்டும் 52 கோடியே, 50 லட்ச ரூபாய் செலவில் புதிதாக வீடுகளை கட்ட இருக்கிறோம். இந்தத்தொகையில் சுமார் 25 ஆயிரம் வீடுகள் கட்டப்பட இருக்கின்றன.

முதல்கட்டமாக20க்கும் மேற்பட்ட பஞ்சாயத்துக்களில், வீடுகட்ட நிலம் கையகப்படுத்தப்படுகிறது இங்கெல்லாம் தனித்தனி வீடுகள்கட்டப்படுகின்றன.

இதுவரை வாரியத்தினால் கட்டி முடிக்கப்பட்டு, வாடகைக்கு விடப்பட்டுள்ள வீடுகளில்உள்ள பழுதுகள் முழுதுமாக சீரமைக்கப்படும் பணிகள் நடைபெறுகின்றன,

வெள்ளி விழா ஆண்டு நினைவாக, வீட்டு வசதி வாரியத் தலைமை அலுவலகத்திற்கு அருகே 13மாடி கட்டிடம் கட்டப்பட உள்ளது. இதற்கு 3 கோடி ரூபாய் செலவாகும்.

இந்தக்கட்டிடத்தின் அமைப்பு நவீனமுறையில் இருக்க வேண்டும் என்பதற்காக வரை படங்களை கேட்டிருக்கிறோம். போட்டியில் தேர்ந்தெடுக்கப்படும் வரைபடத்திற்கு முதல் பரிசு வழங்கப்படும்

இந்த புதிய பல மாடிக் கட்டிடம், இதுவரை எங்கும் இல்லாத வகையில் பல்வேறு சிறப்பு அம்சங்கள் கொண்டதாக இருக்கும்.

வெள்ளிவிழா ஆண்டையொட்டி இனிமேல் வாரியம் கட்டும் புதிய வீடுகள் நவீன பாணியில்இருக்கும். இதற்காகவும் வரை படங்களைக் கேட்டிருக்கிறோம். மூன்று, நான்கு வரை படங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அதற்கு பரிசுகள் வழங்கப்படும். அந்த மாதிரி அமைப்பிலேயே புதியவீடுகள்கட்டபடும்.



இவ்வாறு ஏ.செல்லையா தெரிவித்தார்.

---

### ஏல விற்பனை

1. தாராசந்த் ஹுக்மிசந்த், 24. A, எல்டாம்ஸ் சாலை, சென்னை-18 (1980-ம் வருடத்திற்கு முன்பும் 15-10-82 முதல் 10-1-84 முடிய) ஏலத்தேதி 1-3-85, 2. கே. கபூர்சந்த் பொரானா, 9. ஷண்முகராயன் சந்து, சென்னை-1 (1-2-83 முதல் 31-12-83 முடிய) ஏலத்தேதி 7-3-85, 3ஆர்.சந்தன்மல்சௌக்கார் 71, சிங்கண்ணச்செட்டி தெரு, சென்னை-2 (1980ம் வருடத்திற்கு முன்பும், 1-9-82 முடிய) ஏலத்தேதி 8-3-85 4. மேனாகன்வார், 70, சிங்கண்ணசெட்டிதெரு சென்னை -2 (1-2-83 முதல் 30-9-83 முடிய) ஏலத்தேதி 8-3-85, 5) ஸ்ரீபாலஜி & கோ. 108 கலவசெட்டிதெரு, சென்னை -2 11-3-83 முதல் 30.11.83 முடிய)ஏலத்தேதி8-3-85. 6) யு.கனராம்,47 எஸ். எக்ஸ்டென்ஷன்ரோடு,ஜே.புரம், சென்னை-31(1-3-83 முதல் 30.12.83 முடிய) ஏலதேதி 8-3-85 7)தர்மிசந்த்& கோ 37, ரங்கநாதன்ரோடு, சென்னை.34(1.4.83 முதல் 10-1-84 முடிய) ஏலத்தேதி 15-3-85, 8) எஸ். பராஸ் சந்த்ஜெயின். 191,வி.எம். தெரு,சென்னை-14(1-3-83 முதல் 30-11-83 முடிய) ஏலத்தேதி 15-3.85 9). பி. சுசன்சந்த் ஜெயின், 191. வி.எம்.தெரு,சென்னை- 14 (1-8-83 முதல் 30-11-83 முடிய) ஏலத்தேதி 15-3-85, 10. ஜே. புக்ராஜ்ஜெயின், 224, பிராட்வே, சென்னை-108, 25-8-82 முதல் 30-11-83 முடிய) ஏலத்தேதி 15-3-85, 11. ராஜேஷ்&கோ 20 தம்பயை ரெட்டி தெரு, சென்னை-33. 1-9-82 முதல்30-12-83 முடிய) ஏலத்தேதி 15-3-85 12. பி. மங்கிலால்மேத்தா, 3, தையப்ப முதலி சந்து, சென்னை-1, 1-8-83 முதல் 12-1-84 முடிய) ஏலத்தேதி 19-3-85,

மேற்படி கடைகளில் அடகு வைத்து, மீட்கப்படாத பொருட்கள் மேற்படி தேதிகளில் காலை 10 மணிக்கு மேல் வருவாய்த் துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏலதாரர் எம். ஜவஹர்லால் போரா, 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப் பேட்டை சென்னை-2, அவர்களால் ஏலம் போடப்படும்.

---

சிங்களவர் கொடுமை

## இரு வாரங்களில் இலங்கைத் தமிழர் 7 ஆயிரம் பேர் வருகை

### தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் பேட்டி

**சென்னை, பிப். 24- சிங்கள வெறியர்களின் தாக்குதலுக்கும், இலங்கை அரசின் கொடுமைகளுக்கும் அஞ்சி, இலங்கைத் தமிழர்கள் சுமார் 7 ஆயிரம் பேர் இரு வாரங்களில் தமிழகம் வந்துள்ளனர்.**

அரசு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களிடம் இதுபற்றி கூறியதாவது:-

நேற்று முன்தினம் மட்டும் 197 குடும்பங்கள், சுமார் 900 பேர் இலங்கையிலிருந்து வந்துள்ளனர்.

இரு வாரங்களில் ஏறத்தாழ 7 ஆயிரம் பேர் தமிழகம் வந்துள்ளனர்.

இலங்கையிலிருந்து தமிழகம் வருபவர்களை தற்காலிகமாக குடியமர்த்த தேவையான உதவிகளை அரசு அளித்து வருகிறது.

தமிழ்நாடு அரசின் மறுவாழ்வுத்துறைசிறப்பான ஏற்பாடுகளைச்செய்து வருகிறது.

### திருப்தியான உதவிகள்

இவர்களுக்கு எதிர்காலத்தில் எப்படிப்பட்ட உதவிகளை அளிப்பதுஎன்பது பற்றி மாநிலஅரசும், மத்திய அரசும் கலந்து பேசிஅறிவிக்கும்.

இலங்கையிலிருந்து வரும் தமிழர்கட்குமுகாம்களில் கொடுக்கப்படும் உதவிகள் போதுமானதாக இல்லை என்று சொல்வது சரியல்ல.

### மன நிறைவு

இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் இந்த முகாம்களுக்கு நேரில் சென்று பார்வையிட்டு வந்தார்.



இப்போதுஅவர்களுக்கு அங்கு அளிக்கப்படும் உதவிகள் மன நிறைவை அளிப்பதாக உள்ளது என்று தெரிவித்து இருக்கிறார்.

முகாம்களுக்கு தேவையான நிதியை அரசு ஒதுக்கி வருகிறது.

இவ்வாறு சொக்கலிங்கம் கூறினார்.



---

சேத்துப்பட்டில்

### எம்.ஜி.ஆர் இரவு பள்ளி திறப்பு விழா

சென்னை, பிப், 24- சென்னை 83-வது வட்டம் சேத்துப்பட்டு சலவைச் சாலையில் நேற்று மாலை 6 மணிக்கு பி.சுந்தரமூர்த்தி தலைமையில் எம்.ஜி.ஆர் இரவு பள்ளி திறப்பு விழாவும், மாணவர்களுக்கு சிலேட் புத்தகம் வழங்கு விழாவும் நடைபெற்றது.

எம்.ஜி.ஆர்.இரவுபள்ளியைத் திறந்து வைத்து குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி.என். செல்வம்இலவச புத்தகங்களை வழங்கினார்.

விழாவில் மா. சு. மணி, வெற்றிச் செல்வன், எம். ஏ.பழனி மு.வரதராஜன் சிம்சன்பழனி, கே.ராஜன், முகிலரசன், விஸ்வநாதன், நாகை மனோகரன், காமராஜ், புருசோத்தமன், நர்ஸிங் மற்றும் பலர் பங்கேற்கின்றனர்.

---

அண்ணா நகரில்

### வாலிபர் தூக்கு போட்டு தற்கொலை

சென்னை, பிப். 24- திருச்சியைச் சேர்ந்த வாலிபர் குமாரவேலு (வயது 19). இவர் சென்னை அண்ணாநகரில் தனது தாத்தா வீட்டில் தங்கியிருந்து டிடங்கு தெருவில் துணிக்கடை ஒன்றில் வேலை பார்த்து வந்தார்.

வேலை பார்த்தகடையில் அதிக கடன் வாங்கியிருந்தாராம்.

கடன் காரணமாக முதலாளி திட்டியதால் வெறுப்படைந்து அண்ணா நகரில் ஒரு மரத்தில் தூக்குபோட்டுத் தற்கொலை செய்து கொண்டாராம்.

இது குறித்து திருமங்கலம் இன்ஸ்பெக்டர் தலமலை விசாரித்து வருகிறார்.

---

### ஆளுநர்குரானா திறந்துவைத்த காமராசர் பல்கலைக்கழக கட்டிடம்

மதுரை, பிப், 24- மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் ரூ. 12 லட்சம் செலவில். கட்டப்பட்ட எரிபொருள்துறைக்கான புதிய கட்டிடத்தை கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தலைமையில் தமிழக கவர்னர் குரானா திறந்து வைத்தார்.

பல்கலைக் கழக நிதி உதவி கமிஷன், மாநில அரசு ஆகியவற்றின் உதவியுடன் இந்தக் கட்டிடம் கட்டப்பட்டுள்ளது.

விழாவுக்கு வந்திருந்தவர்களை பல்கலைக் கழக துணைவேந்தர்ஜே.ராமச்சந்திரன்வரவேற்றுப்பேசினார். தமிழக கவர்னர் குரானா கட்டிடத்தைத் திறந்து வைத்தார். பல்கலைக்கழக மானிய உதவி குழுத்தலைவர் மாதுரிஷா சிறப்புரையாற்றினார்.

பின்னர் மூ. வா. அரங்கத்தில் 1984 ஆம் ஆண்டுக்கான பட்டமளிப்பு விழா நடைபெற்றது. டாக்டர் பட்டம் பெற்றவர்கள் முதுகலைப்பட்டதாரிகள், இளநிலை பட்டதாரிகள் உள்பட மொத்தம் 17,095 பேர் பட்டம் பெற்றனர் 195 பேர் நேரில் வந்து பட்டத்தை பெற்றனர். விழாவுக்கு

துணைவேந்தர்கள், அறிஞர் பெருமக்கள் திரளாக கலந்து கொண்டனர். மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் வரதராஜுலு, பழநி கோவில் தக்கார். ராதா தியாகராஜன் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

---



---

### மாவட்டக் கால்நடைப் பண்ணை
புதுக்கோட்டை

## ஒப்பந்த அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநருக்காக ஆளுநரின் சார்பில் புதுக்கோட்டை மாவட்டம் புதுக்கோட்டை மாவட்டக் கால்நடைப் பண்ணைக்கு 1985-86ம் ஆண்டு (31-3-86 முடிய உள்ள காலத்திற்கு) வைக்கோல் வழங்க முத்திரையிடப்பட்ட ஒப்பந்தங்கள் புதுக்கோட்டை மாவட்டம் புதுக்கோட்டை மாவட்ட கால்நடைப் பண்ணை கூடுதல் இயக்குநரால் 12.3.85 பிற்பகல் 2.00 மணிவரை வரவேற்கப்படுகின்றன.

ஒப்பந்த விவர நிபந்தனைகள் தேவைப்படும் அளவின் பட்டியல்,இணைந்த ஒப்பந்தப்படிவங்கள் இரண்டு கொண்ட தொகுப்பு ஒன்றுக்கு ரூ.25.00 (ரூபாய் இருபத்தைந்து மட்டும்) அதன் விற்பனை வரி ரூ. 1.25 (ரூபாய் ஒன்று பைசா இருபத்தைந்து மட்டும்) அதற்கு மேல் வரியாக 0.15 (பைசா பதினைந்து மட்டும்) தமிழகத்திலுள்ள எந்த கருவூலத்திலாவது அல்லது ஸ்டேட் வங்கியிலாவது கீழ்காணும் கணக்குத் தலைப்புகளில் செலுத்தி அதற்குரிய செலுத்துச் சீட்டை (சலானை) புதுக்கோட்டை மாவட்டக் கால்நடைப் பண்ணை கூடுதல் இயக்குநர் அலுவலகத்தில் 11.3.85 முடிய எல்லா அலுவலக நாட்களிலும் மாலை 4 மணிவரை செலுத்தி பெற்றுக்கொள்ளலாம்.

| | |
|---|---|
| ரூ. 25.00-க்குத் தலைப்பு | 11OK AnimalHusbandry-other receip ts 08. other receipts 11Oaakaa 0809. |
| ரூ. 1.25-க்குத் தலைப்பு | 040 - Other taxes and duties Sales tax |
| ரூ. 0.15-க்குத் தலைப்பு | 040 ABAA 0104 |

இத்தொகை எக்காரணம் கொண்டும் திருப்பித்தரப் படமாட்டாது என்பதுடன் ஒப்பந்தப் படிவங்களும் மாற்றத்தக்கவையல்ல.

வரவேற்கப்பட்ட ஒப்பந்தங்கள் புதுக்கோட்டை மாவட்டம், புதுக்கோட்டை மாவட்டக் கால்நடைப் பண்ணை, கூடுதல் இயக்குநர் அலுவலகத்தில், புதுக்கோட்டை மாவட்டக் கால்நடைப்பண்ணை, கூடுதல் இயக்குநரால் 12-3-85 அன்று மாலை 2-30 மணிக்கு ஒப்பந்தக்காரர்கள் அல்லது அவர்களது அங்கீகரிக்கப்பட்ட பிரதிநிதிகள் முன்னிலையில் திறக்கப்படும்.

கூடுதல் இயக்குநர் (கா. ப.)

---






★★ தியாகராசன் - தீபா
படம்:- ராஜா யுவராஜா

# விஜயாவின் விரதத்தை கெடுக்க செந்தாமரை முயற்சி

ராஜேஸ்வரி குளித்து விட்டு ஈரச்சேலையுடன் வீட்டிற்குள் பூஜை செய்வதற்காக வந்தாள்.

குடித்துவிட்டு போதையுடன் வந்த ராஜலிங்கம் கண்களில் ராஜேஸ்வரி தென்பட்டு விட்டாள்.

''ஏய்... நில்லு...! குடிச்சாத்தான் போதை வரும்னு நினைச்சேன் குளிச்சிட்டு வாற பொண்டாட்டியைப் பார்த்தாக்கூடப் போதை வரும்னு இப்பத்தான் எனக்குத் தெரியுது. ஆமா வருஷம் போகப் போக வயசு அதிகமாகும்னுதான் சொல்லுவாங்க, உனக்கு வருஷம் கூடக்கூட வயசு குறையுதே... அது எப்படி என்றபடி ராஜேஸ்வரியிடம் நெருங்கினார்.

''அபச்சாரம்...! நீங்க பழையபடி நல்ல நிலைமைக்கு வரணும்னு தான் நாற்பது நாள் விரதம், படையல் போட்டிருக்கேன். அதைக் கெடுத்திடாதீங்க'' என்று ராஜேஸ்வரி கெஞ்சுகிறாள்.

'என்னடி......பெரிய படையல்.. ... பூஜை......? ஒரு நல்ல பொண்டாட்டிக்கு புருஷன் தாண்டி தெய்வம்......! முதல்லே... எனக்குப் படையல் போடு... வா...!' என்று கூறி கையைப் பிடித்து இழுக்கிறார்.

ராஜேஸ்வரி பயத்தோடு கெஞ்சுகிறாள். ''சீ...வாடி...'' என்று கூறி, கட்டிப் பிடித்து பலாத்காரமாக ராஜலிங்கம் பூஜை செய்யச்சென்ற ராஜேஸ்வரியை அறைக்குள் இழுத்துச் செல்கிறார்.

இக்காட்சி மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி படத்துக்காக படமாக்கப்பட்டது. ராஜலிங்கமாக செந்தாமரையும், ராஜேஸ்வரியாக கே. ஆர். விஜயாவும் நடித்தனர். தத் ஒளிப்பதிவு செய்தார், சாரதா ஸ்டுடியோவில் படப்பிடிப்பு நடந்தது.

ராஜேஷ், சரிதர் நளினி தேங்காய் சீனிவாசன், மனோரமா மற்றும் பலர் நடிக்கின்றனர் சக்திதாசன் கணேசன் கதை எழுதுகிறார். கவிஞர் வாலியின் பாடல்களுக்கு கே. வி. மகாதேவன் இசையமைத்துள்ளார் இது ஒரு துரிதகால தயாரிப்புசெல்விஆர்ட்ஸிற்காக ஜே. குருமூர்த்தி தயாரிக்கிறார். எஸ். ஜெகதீசன் இயக்கி வருகிறார்.



★★ பிரபு - அனுராதா
படம்:- நேர்மை

# நடிகை நளினிக்கு சந்திரசேகர் புத்திமதி

கல்லூரி படிப்பை முடித்து விட்டு கிராமம் திரும்பிய செல்விக்கு மதியழகனை கல்யாணம் செய்து கொடுக்கின்றனர். 5-வதுவரையே படித்திருந்த மதியழகன் அமைதியானவன். அவனை விட்டு விலக செல்வி தீர்மானித்தாள். ஆனால் மதியழகன் அனுப்பமாட்டேன் என்கிறான். ''நீங்களே என்னை வெளியேற்றும்படி செய்கிறேன்'' என்று செல்வி கூறுகிறாள்.

ஒரு நாள் மதியழகனின் தாயார் தனது நகையை தேடினார். கிடைக்கவில்லை. இறுதியில் நளினியின் பெட்டியில் கிடைத்தது. 'திருடி' என்று தாயார் திட்ட, அங்கு வந்த மதியழகன், 'நான் தாம்மா நகையை செல்வியோட பெட்டியில வைச்சேன்' என்றுபிரச்சினைக்கு முற்றுப் புள்ளி வைத்து தாயாரை அனுப்பிவிட்டு செல்வியிடம் ''வீட்டை விட்டுப் போகும்போது திருடிங்கிற பட்டத்தோட போகாதே நல்ல தனமா போறதுக்கு முயற்சி பண்ணு'' என்று சொல்லிவிட்டுப் போகிறான்.

இக்காட்சி விஜயகலா பிக்சர்ஸ் ''வீட்டுக்காரி'' படத்திற்காக ஏ.வி.எம்.மில் படமாக்கப்பட்டது. மதியழகனாக சந்திரசேகர், செல்வியாக நளினி தாயாராக காந்திமதி நடித்தனர்.

சுரேஷ்- ஜீவிதா, சங்கிலி முருகன், பிந்து கோஷ், கல்லாப்பெட்டி சிங்காரம் இன்னும் பலர் நடிக்கும் இதன் ஒளிப்பதிவைஎன்.கே.விசுவநாதன் கவனிக்கிறார்.

சங்கர்-கணேஷ் இசையமைக்கும் இதன் கதை வசனத்தை கஜேந்திரகுமார் எழுதுகிறார். ஆர். எம். சுப்பையா, ஜே. துரை இணைந்து தயாரிக்கும் இதன் திரைக்கதை டைரக்ஷனை இராம நாராயணன் கவனித்து வருகிறார்.



★ ஜெயமாலினி
படம்:- நண்பர்கள் சவால்

# பொருத்தம்

-:விமர்சனம்:-

மக்களை சிரிக்க வைப்பதற்காக படம் எடுக்கக் கூடியவர்கள் வரிசையில் முதலில் நிற்பவர் மவுலி. அந்த வகையில் மசாலா கலந்த ஒருநகைச் சுவைப்படத்தை பொருத்தம் என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

காதலுக்காக வாழும் இளைஞன், அவனைச் சுற்றி உறவு, நண்பர்கள் என்று பின்னப்பட்டது இதன் கதை.

காதலுக்காக வாழும் இளைஞனாக நரேஷ் குமார் நடித்துள்ளார் வழக்கமான நடிப்பு பெரிதாக ஒன்றும் குறிப்பிடும்படியாக இல்லை.

கதாநாயகியாக நடித்துள்ள பூர்ணிமா பொம்மை போல் வந்து போகிறார். வினு சக்கரவர்த்திக்கு கொஞ்சம் வித்தியாசமான வேடம் என்றாலும் சிறப்பாக செய்துள்ளார். இவர் வரும் காட்சிகளில்தியேட்டரே கலகலக்கிறது.

மவுலி, மனோரமா காமெடி மிகவும் ரசிக்கும்படியாக உள்ளது, பாடல்கள் மிகவும் அருமையாக உள்ளன.

மவுலியின் நகைச்சுவை வசனங்கள் தியேட்டரே குலுங்குமளவு சுவாரசியமாக உள்ளது. படத்தின் விறு விறுப்பு குறையாது நகைச்சுவை இழையோட நயம்பட வசனம் அமைத்ததோடு திறமையாகவும் மவுலி படத்தை இயக்கியுள்ளார்.

மொத்தத்தில் அனைத்து தரப்பினரும் விரும்பிப் பார்க்கும் பொழுதுபோக்குப்படம்.

# சத்யராஜ் - அனுராதா உல்லாசம்

பெரும் கடத்தல் மன்னன் நளினிகாந் அவன் சீடன் சத்யராஜ். கால கட்டத்தில் சீடன் சத்யராஜ் பிரபலமடைகிறார். ஒரு நாள் குரு நளினிகாந்த் சீடனை தேடிவருகிறார். சீடன் சத்யராஜ் தன் காதலியுடன் சாகசம் புரிகிறார். இதை பார்த்த குரு தன் சீடனிடம் எனக்காக அவளை ஒரு பாட்டுபாடி, ஆடச்சொல் என்று உரைக்கிறார். சீடனும் அதன்படி தன் காதலியிடம் கூறுகிறான். ஆனால் காதலியோ தன்காதலன்முன்பு தான் ஆடுவேன் என்று கூறி மறுத்து விடுகிறாள். ஆத்திரம் அடைந்த குரு வீட்டை விட்டு வெளியேறும்போது அந்த அழகிய காதலி தன் காதலனிடம் பாடுகிறாள்

''கட்சத்தீவில் கை
வைத்துப் பாரு
கன்னித்தீவில் நீசொர்க்
கம் தேடு
கப்பலோட்டி நங்கூரம்
போடு''

என்றுஇப்படியொருபாட்டல் காட்சி 'பெனின்சுலா புரொடக்ஷன்ஸ்' அர்த்தமுள்ள ஆசைகள்' படத்திற்காக படமாக்கப்பட்டது.

கார்த்திக் - அம்பிகா தேங்காய்சீனிவாசன். ஆனந்தபாபு- சத்யராஜ் பண்டரிபாய், அனுராதா- ஒய். விஜயா- லூஸ்மோகன் செந்தில் மற்றும் பலர் நடிக்க. கதை -திரைக் கதை-வசனம் டைரக்ஷன் பொறுப்பேற்றிருப்பவர் பாபு மகாராஜா. இசை- கங்கை அமரன் - ஒளிப்பதிவு ஏ. பி. ராமகிருஷ்ணன் தயாரிப்பு முகமது காசீம்-தாஜுதீன் படம் துரிதமாககிறது.



★ நளினி - சுரேஷ்
படம்:- உன்னைத் தேடி வருவேன்



★ சிரஞ்சீவி - ராதா
படம்:- புலி

ஆனந்த்பாபுவை அடைய

# அப்பாவுடன் அனிதா மோதல்

ஜட்ஜ் கருணகரனின் ஒரே மகள் ராதா. நல்ல அழகி மட்டுமல்ல வசதி படைத்தவளும் கூட, இவள் கல்லூரியில் படிக்கும் போது கண்ணன் என்ற அழகான ஏழை வாலிபனைக் காதலித்தாள். இவர்கள் காதல் நாளுக்கு நாள் வளரத் தொடங்கியது.

ஒருநாள் இவர்கள் காதல் ரகசியத்தினை ஜட்ஜ் கருணாகரன் அறிகிறார். உடனே தனது மகள் ராதாவிடம் நமது அந்தஸ்துக்கு இது சரியில்லை. நீஉன்காதலனை அடியோடு மறந்து விடு என எச்சரிக்கை செய்கிறார்.

தந்தை சொல்லை ஏற்க மறுத்த ராதாவாழ்ந்தால் நான் என் காதலனுடன் தான் சேர்ந்து வாழ்வேன் எனகூறிவீட்டை விட்டே வெளியேறினாள்.

இப்படி ஒரு உணர்ச்சிகரமான காட்சி விஜய பாஸ்கர் பிலிம்ஸ் தயாரித்து வரும் கண்ணனின் ராதை'' என்ற படத்துக்காக படமாக்கப் பட்டது.

கண்ணனாக ஆனந்த பாபுவும், ராதாவாக அனிதாவும், ஜட்ஜ்கருணாகரனாக ஜெய்சங்கரும் நடிக்கிறார்கள், மற்றும் இந்தப் படத்தில் சத்தியராஜ், அரிபிரசாத், செந்தாமரை. சார்லி, பபிதா, அனுராதா ஆகியோர் நடிக்கிறார்கள்.

திரைக்கதைவசனத்தை ஏ.எல். நாராயணன்எழுத கங்கைஅமரன் இந்தபடத்துக்கு இசையமைக்கிறார். ஒளிப்பதிவுசுரேஷ்விஜயன் தயாரிப்பு டைரக்ஷன் ஆகிய பொறுப்பினை எஸ்.பாஸ்கர் கவனிக்கிறார்.

இப்படம் மே மாதம் திரைக்கு வருகிறது.

## 'கல்யாண மலர்கள்'

ஸ்ரீ மகரஜோதிபிலிம்ஸ் தயாரிககும் ''கல்யாண மலர்கள்'' பட்த்தில் நன்னிலம் ஏ. கே. கணேஷ் கதாநாயகனாக அறிமுகமாகிறார்,

அவருடன் சாந்தி, சொக்கு, மோகன், ஜெயராமன், குமரேசன், கபாலி நடராஜன், அறிமுகமாகின்றனர் மற்றும் கவுண்டமணி, உசிலைமணி, காந்திமதி, டிஸ்கோ சாந்தி நடிக்கும் இப்படத்திற்கு இராமன்குட்டி ஒளிப்பதிவு செய்கிறார். சங்கர்-கணேஷ் இசையமைக்கிறார். வசனங்களை நெல்லை ராஜகுரு எழுத கதை திரைக்கதை எழுதி இயக்கிறார்தஞ்சை இதயராஜா,

தயாரிப்பு ஏ. கே. கணேஷ், கடலூர் கிரிஜா, ஜோதிமணி, திருமதி கற்பகவல்லி.

# மீண்டும் பராசக்தி

செந்தாமரையும்சௌந்தரும் பெரும் பணக்காரர்கள். இருவரும் இணைந்து வியாபாரம்செய்து வந்தனர். இருவருககுமிடையே மனவேருபாடுகள் சிறிது சிறிதாக வளர ஆரம்பித்தது. ஒருநாள் சௌந்தர் லட்ச ரூபாய் மதிப்புள்ள ''கான்டெசா'' காரில் வெளியூருக்கு புறப்பட்டார். இதை முன்பே அறிந்திருந்த செந்தாமரை அக்காரில் ஒரு ''டைம்பாம்'' வைத்து விட்டார். ஊட்டியின் எழில்மிகு இடங்களில் பயணம் செய்து விட்டு சௌந்தர் ஊட்டியை அடுத்த பயங்கர காடுகளில் காரில் சென்றுகொண்டிருந்தபோது கான்டெசா கார் பயங்கரமாக வெடித்து சிதறியது.

இக்காட்சியை இரண்டு காமிராக்களில் ஒலிப்பதிவாளர் கணேசபாண்டியன் ஸ்ரீதேவி பகவதிபிலிம்ஸ் ''மீண்டும் பராசக்தி'' படத்திற்காக படமாக்கினார். படத்தில் சிவக்குமார், நளினி, கவுண்டமணி, செந்தாமரை, கே.கே.சௌந்தர், வடிவுக்கரசி, ஒய். விஜயா, மனோரமா, ஜெயராஜ் ஆகியோர் நடிக்கின்றனர். இப்படத்தின் கதையை ராகவன் தம்பி எழுத திரைக்கதையை தர்மராஜ் அமைக்க வசனத்தை செல்வகுமார் எழுதியுள்ளார். படப்பிடிப்பு முழுவதும் முடிவடைந்துவிட்ட இப் படத்தை தயாரிப்பாளர் ராமதாஸ் மார்ச் முதல் வாரத்தில் திரையிட ஏற்பாடுகள் செய்துள்ளார். இளையராஜா இசையமைக்கும் இப்படத்தை ஏ.ஜெகநாதன் டைரக்ட் செய்துள்ளார்